**கருங்காலக்குடி**

மதுரையிலிருந்து மேலூர், கொட்டாம்பட்டி வழியாகத் திருச்சி செல்லும் சாலையில் கொட்டாம் பட்டிக்கு முன்னர் இவ்வூர் அமைந்துள்ளது. மதுரை மாவட்டத்தில் சங்க காலத்திலிருந்தே சிறப்புடன் விளங்கி வரும் ஊர்களுள் கருங்காலக்குடியும் ஒன்று. இவ்வூரில் வரலாற்றுக்கு முந்திய காலத்து மனிதனின் ஈமச் சின்னங்கள் கண்டறியப் பட்டுள்ளதும் பாறை ஓவியங்கள் கண்டறியப் பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கது. இவ்வூரில் கிழக்குப் பகுதியிலுள்ள குன்றில் பஞ்ச பாண்டவர் படுக்கை என்றழைக்கப்படும் இடத்தில் கற்படுக்கைகள் அமைக்கப் பட்டுள்ளன. சமண முனிவர்களுக்காக இக்கற்படுக்கை களை ஏழையூரைச் சேர்ந்த அரிதன் என்பவர் கி.மு. 2 ஆம் நூற்றாண்டில் அமைத்துக் கொடுத்த செய்தி குகைத் தளத்தின் முகப்பில் கல்வெட்டாகப் பொறிக்கப் பட்டுள்ளது. இக்குகைத் தளத்தின் மேற்புறமுள்ள பாறையில் கிழக்கு நோக்கிய நிலையில் சமண தீர்த்தங்கரரின் திருமேனி ஒன்று புடைச் சிற்பமாகச் செதுக்கப்பட்டுள்ளது. கி.பி. ஒன்பது - பத்தாம் நூற்றாண்டுக் கலைப்பாணியிலான இத்திருமேனி அச்சணந்தியால் செய்விக்கப்பட்டுள்ள செய்தி அத்திருமேனிக்கருகிலேயே வட்டெழுத்தில் பொறிக்கப்பட்டுள்ளது.

இப்பஞ்சபாண்டவர் குகைத் தளத்தின் மேற்புறமுள்ள குகைத்தளத்தில் பாண்டிய மன்னனின் அதிகாரியாக விளங்கிய பள்ளித்தரையன் என்பவரின் செயல்களையும் சிறப்புகளையும் விளக்கிக் கூறும் பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டொன்றுள்ளது. 'பள்ளித் தரையன்' என்ற பெயர் சமணப் பள்ளியோடு தொடர் புடையவர் என்ற தொனியிலமைந்திருப்பது கவனத் திற்குரியது.

இவ்வூரிலுள்ள முத்தாலம்மன் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களிலிருந்து முதலாம் சடையவர்மன்

*சுந்தரபாண்டியனின் ஆட்சிக் காலத்தில், அழகப்பெருமாள் விண்ணகர் என்ற பெருமாள் கோயிலொன்றிருந்ததைத் தெரிந்து கொள்ள முடிகிறது. இக்கோயிலுக்கு வழங்கப் பட்ட நிலங்களில் ஒன்று பெருவழிக்கு மேற்கிலிருந்ததாக ஒரு கல்வெட்டு சுட்டுவதிலிருந்து, இப்பகுதி பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில் இருந்தே பெருவழியி லமைந்திருந்தமை தெளிவாகிறது. இப்பெருமாள் கோயிலுக்கு வழங்கப்பட்ட நிலங்கள் ஆளப்பிறந்த சோழச் சதுர்வேதி மங்கலத்திலும், சுரபி நாட்டு சூழும் அரசர் கண்டன் பகுதியிலும் இருந்துள்ளன. சுரபி நாட்டு சூழும் அரசர் கண்டனின் தென்பகுதியிலிருந்த பகையனேரி இப்பெருமாளின் பெயரால் அழகப்பெருமாள் நல்லூரென் றழைக்கப்பட்டுள்ளது. இந்த அழகப் பெருமாள் நல்லூரில் இப்பெருமாளுக்கான திருநாமத்துக் காணியாக இறையிலி நிலங்கள் இருந்துள்ளன.*

*இவ்வூரருகிலுள்ள வயலிப்பாறையின் வடசரிவிலுள்ள கல்வெட்டொன்றிலிருந்து மாடக்குடியைச் சேர்ந்த சீராளன் திருவெண்காடுடையான் என்பவர் கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டளவில் இவ்வூர் குளத்தில் கலிங்கமைத்த செய்தியையும் அவர் கணக்கராகப் பணியாற்றி வந்த செய்தியையும் தெரிந்து கொள்ள முடிகிறது. இக்கல் வெட்டிலிருந்து கி.பி. 12-13 ஆம் நூற்றாண்டளவிலிருந்து இன்று வயலிப்பாறை அருகிலுள்ள குளம் நீர்ப்பாசனத் திற்குப் பயன்படுத்தப்பட்டு வருவதும் தெளிவாகிறது. வயலிப்பாறையின் தென்சரிவிலுள்ள கல்வெட்டிலிருந்து, இப்பகுதியில் கி.பி. 1713-22 ஆம் ஆண்டளவில் மாமரம் வளர்க்கப்பட்டமையையும், கிணறு தோண்டப் பட்டமை யையும் அறியப்படுகிறது. கி.பி. 18 ஆம் நூற்றாண்டளவில் வத்தலைராவுத்தர் என்பவர் இக்குளத்திற்கு மடையமைத் துள்ளார்.*

இவ்வூருக்கருகிலுள்ள உப்புச்சுனைப் பாறையின் கீழ்ப்புறமுள்ள கல்வெட்டு ஒன்றிலிருந்து பிரான்மலையைச் சேர்ந்த சுந்தர பாண்டியப் பிச்சாசாரி என்ற கண்மாளரும், சேந்தன் கணக்கப்பிள்ளை அழகப்பன் என்பவரும் இந்த உப்புச் சுனைக்குக் கி.பி. 18 ஆம் நூற்றாண்டளவில் கல்கட்டி வைத்ததைத் (பாதுகாப்புச் சுவர்?) தெரிந்து கொள்ள முடிகிறது.

உப்புச்சுனைப் பாறையின் மேல்பக்கச் சரிவிலுள்ள கல்வெட்டிலிருந்து கி.பி. 1604 அளவில் நத்தம் பகுதியில் இருந்து ஆட்சி புரிந்த பாளையக்காரரான இலிங்கம நாயக்கரின் அதிகாரியாக இருந்த சிங்காரராவுத்தர் என்பவர் கள்ளரைப் பிடித்த செய்தி காணப்படுகிறது. இதிலிருந்து கி.பி. பதினேழாம் நூற்றாண்டின் துவக்கத்தில் கள்ளர் பயத்தைக் குறைக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டுள்ளன என்பது புலனாகிறது.

## திருச்சுனை

மதுரை மாவட்டம் மேலூர் வட்டத்தில் மேலூரிலிருந்து திருச்சி செல்லும் நெடுஞ்சாலையில் அமைந்துள்ளது இவ்வூர். இவ்வூரில் திரு அகத்தீசுவரம் உடையார் என்னும் புகழ் பெற்ற சிவன் கோயில் உள்ளது. பிற்காலப் பாண்டியர்களால் ஆதரிக்கப்பட்ட இக்கோயிலில் உள்ள கல்வெட்டுகளின் மூலம் இவ்வூரின் பழைய பெயர் சுழிவரகண்டன் என்று அறிகிறோம். இது சுரநாடு என்னும் உள்நாட்டுப் பிரிவுக்குள் அடங்கியிருந்தது. இவ்வூரவர் ஒன்றாகக் கூடி செயல்பட்டு இங்குள்ள கோயில் நிருவாகத்தினைச் செவ்வனே செய்துவந்துள்ளனர். முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டு ஒன்றின் மூலம் இவ்வூர் பிரான்மலையிலுள்ள திருக்கொடுங்குன்றமுடைய நாயனார் கோயிலுக்கு விடப்பட்ட ஊராகவும் அதற்கென இவ்வூரில் சூலக்கல் நாட்டப்பட்டிருந்தது என்பதும் தெரிய வருகிறது. அமராபதி வேளார் என்னும் குறுநிலத் தலைவர் இப்பகுதியின் முக்கிய அதிகாரியாக 13ஆம் நூற்றாண்டில்

திகழ்ந்துள்ளார். இவர் இவ்வூரில் இருந்த வாளிலார் என்னும் ஒருவகை வீரர்களைத் தம் கட்டுப்பாட்டில் கொண்டு இக்கோயில் வழிபாடு, நில நிர்வாகம் ஆகியவற்றை மேற்கொண்டுள்ளார். இவ்வூரில் சடையவர்மன் குலசேகரன், மாறவர்மன் சுந்தரன் ஆகியோர் காலக் கல்வெட்டுகள் உள்ளன. துவராபதி நாட்டு எறிபடை நல்லூர் (இன்றைய நத்தம்) பகுதியிலிருந்தும், அதன் அண்மைக் கிராமங்களிலிருந்தும் பல முக்கிய அதிகாரிகளும், பிரமுகர்களும் வந்து கோயிலின் வளர்ச்சியிலும் நிர்வாகத்திலும் பெரும் பங்காற்றி உள்ளனர் என்பதைக் கல்வெட்டுகள் கொண்டு அறிகிறோம்.

**தருக்காக்குடி**

மதுரையிலிருந்து திருச்சி செல்லும் சாலையில் கருங்காலக்குடிக்கும் கொட்டாம்பட்டிக்குமிடையில் சிங்கம்புணரி பிரிவுச் சாலை அருகில் மேற்குப் புறமாக செல்லும் சாலையில் சென்றால் தருக்காக்குடியை அடையலாம். இவ்வூரில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் கட்டப்பட்ட சிவாலயமொன்றுள்ளது. பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுக்களில், இவ்வூரின் பெயர் திருக்காய்க்குடி என்று சுட்டப்பட்டுள்ளது. இவ்வூர் பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில் சுரநாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்திருக்கிறது. இங்கெழுந்து அருளியுள்ள சிவபெருமான், சுரநாட்டுத் திருக்காய்க்குடியில் உடையார் திருக்கோடீசுவரமுடைய நாயனார் என்ற அழைக்கப்பட்டுள்ளார். பிற்காலத்தில் இவ்வூருக்கு வேழகுலநார்ரை அன நல்லூர் ஆன தறுக்காக்குடி என்று பெயரும் தருக்காய்க்குடி என்ற பெயரும் வழங்கியுள்ளன. திருக்காய்க்குடி என்ற பெயரே நாளடைவில் தருக்காய்க் குடி என்றும் தறுக்காக்குடி என்றும் மருவியுள்ள தெனலாம். விசயநகர வேந்தர் காலத்தில் இவ்வூர் துவாராபதி நாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்டு இருந்துள்ளது.

பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில் இப்பகுதியில் சூழும் அரைசர்கண்டன் (திருச்சுனை) மேன்மலையூர் அறுநூற்றுவனேரி, வீரகண்டன் ஆகிய ஊர்களில் ஊரவைகள் செயல்பட்டுள்ளன.

திருக்கோடீசுவரமுடையார் திருக்கோயில் தர்க்காகுடி ஊருக்கு வெளியே, ஊரணிக் கரையில் காணப்படுகிறது. கி.பி. 13ஆம் நூற்றாண்டளவில் இத்திருக் கோயிலில் முருகன், விநாயகர், பைரவர் போன்ற சிறு தெய்வங்களுக்குச் சிற்றாலயங்கள் இருந்துள்ளன. இன்றைய தினம் இத்திருக் கோயில் கிழக்கு நோக்கிய கருவறை, அர்த்த மண்டபத் துடன் சிறிய கோயிலாகத் திகழ்ந்து வருகிறது.

அருவியூர் நாலுநகரத்து பூண்டி உடையான்... பாண்டியப் பெருமாள் என்பவர் திருக்கோடீசுவர முடையார் கோயிலில் அம்மனை (நாச்சியார் திருக்காமக் கோட்டமடந்தையை) எழுந்தருளப் பண்ணியுள்ளார். விசயநகர வேந்தர் சதாசிவராயர் காலத்தில் இவ்வம்மனுக்கு மகாபூசை நடத்தி வரப்பட்டுள்ளது. இந்த மகாபூசை நாயக்கர் ஒருவரின் தன்மத்தில் நடைபெற்று வந்துள்ளது.

திருக்கோடீசுவரமுடையார் திருக்கோயிலில் பிற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்தில், ஐப்பசித் திங்களில் (விஷு நாளில்?) ஒரு கல நெல்லில் அமுது செய்விக்கப்பட்டுள்ளமை, பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில் இக்கோயில் வழிபாடு மிகச் சிறப்பான நிலையில் இருந்தமையைப் புலப்படுத்துகிறது.

சிவன் கோயிலில் பைரவர் சன்னதிக்கருகில் தனிக் கல்லிலுள்ள 14ஆம் நூற்றாண்டு கல்வெட்டிலிருந்து இவ்வூரைச் சேர்ந்த கடகமறுக்கிகள் தங்கள் பெயரால் பால்கலசம் வைத்தமையைத் தெரிந்து கொள்ள முடிகிறது.

## சொக்கலிங்கபுரம்

மேலூர் வட்டத்தில் கொட்டாம்பட்டிக்கருகில் அமைந்துள்ள இவ்வூரில் முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலத்துச் சிவாலயமுள்ளது. பிற்காலப் பாண்டியர் ஆட்சிக் காலத்தில் இவ்வூருக்கு மேன்மலையூர் என்ற பெயர் வழங்கியுள்ளது. இவ்வூர் சுரநாடு என்ற நாட்டுப் பிரிவிற்குட்பட்டிருந்துள்ளது. சிவாலயத்திற்கு அழகிய சே(ா)ழீசுவரமுடையார் கோயில் என்ற பெயர் வழங்கி வந்துள்ளது. வஞ்சியூர்குளம், அமுதனேரி, துறையூர்க்குளம், புரவேரிக்குளம், முதலிய குளங்கள் இவ்வூர்க் கல்வெட்டில் சுட்டப்பட்டுள்ளன. இவையனைத்தும் ஏறத்தாழ 700 ஆண்டுகாலப் பழைமையுடையவை என்பது குறிப்பிடத்தக்கது. மேலும் இப்பகுதியிலுள்ள ஒரு ஊரின் பெயர் அறுநூற்றுவனேரி என ஏரியின் பெயரால் அமைந்துள்ளமையும் கவனத்திற்குரியது. எனவே இப்பகுதி குளங்கள் நிறைந்த பகுதி என்பது தெளிவு. இவ்வூர் சிவாலயத்திற்குத் திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தங்களுக்கென்றும், திருக்காமக் கோட்டமுடைய நாச்சியாருக்கென்றும், பிற்காலப் பாண்டியப் பெருவேந்தர் காலத்தில் இறையிலியாக நிலங்கள் வழங்கப்பட்டிருந்தன. மேலும் கோயில் நந்தவனத்திற்காக நந்தவனப்புற நிலங்கள் வழங்கப்பட்டிருந்தன. இக்கோயில் நந்தவனங்களுள் ஒன்றிற்கு 'அரசு கண்டராமன்' என்ற பெயர் வழங்கியிருக்கிறது.

மேல்மலை ஊரவையினர், தங்கள் ஊர்ப்பகுதி யிலிருந்த புரவேரிக் குளத்தினை அனுபவித்து வந்த ஒருவர் அதற்குரிய கடமை, குடிமை முதலிய வரிகளைச் செலுத்தாமல் இராஜ துரோகம், நாட்டுத் துரோகம், ஊர்த் துரோகம் செய்ததை அறிந்து அப்புரவேரிக் குளத்தினை அழகிய சோழீசுவரமுடையாருக்கு நிலவிலைப் பிராமணம் பண்ணிக் கொடுத்துள்ளனர். இந்நிகழ்வு கி.பி. 1279 இல் நடந்துள்ளது.

**மருதூர்**

*மேலூர் வட்டத்திலுள்ள மருதூரில் பிற்காலப் பாண்டியராட்சிக் காலத்தில், கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் கட்டப்பட்ட பெருமாள் கோயில் ஒன்றுள்ளது. இவ்வூர் கி.பி. 13 ஆம் நூற்றாண்டில் பனங்கர்டியான இராசேந்திர சோழச் சதுர்வேதி மங்கலத்தின் மேல்பிடாகையாக இருந்துள்ளது. பெருமாள் கோயில் கண்ணாழ்வார் கோயில் என்றழைக்கப்பட்டுள்ளது. பெருங்காரைக்குடி என்றழைக்கப்பட்ட குடிதாங்கி நல்லூர் என்ற ஊரும் கேசவனேரிகுளம் என்ற குளமும் இவ்வூர்க் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ளன. பிற்காலப் பாண்டியர் காலத்தில் கண்ணாழ்வார் கோயிலுக்கு இறையிலியாக நிலங்கள் விடப்பட்டிருந்தன.*

# 17. வாடிப்பட்டி வட்டம்

## திருவேடகம்

மதுரையிலிருந்து சோழவந்தான் செல்லும் சாலையில் வைகை ஆற்றின் வடகரையில் அமைந்துள்ளது இவ்வூர். ஏடகநாதர் கோயில் என்னும் தேவாரப் பாடல் பெற்ற கோயில் ஒன்று இங்குள்ளது. ஆனால் இன்று அக்கோயில் முற்றிலும் புதுப்பிக்கப்பட்டுவிட்டது. தற்போதைய கோயில் கடந்த நூற்றாண்டில் செட்டிநாட்டு வணிகர்களால் திருப்பணி செய்யப்பட்டுள்ளது. திருச்சுற்று மதிலில் மட்டும் கி.பி. 13 ஆம் நூற்றாண்டுத் துண்டுக் கல்வெட்டுகள் சில உள்ளன. அவை வரலாற்றுச் செய்திகள் எதையும் தருவனவாக இல்லை. சமணர் - சைவர் வாதில் வைகை ஆற்றில் மதுரையில் விடப்பட்ட ஏடு எதிர் நீந்திச் சென்று இங்கு எடுக்கப்பட்டதால் திருவேடகம் எனப் பெயர் பெற்றது என்பர். இங்கு ஆற்றங்கரை கல் படித்துறையில் சில புடைப்புச் சிற்பங்கள் இக்கதையை உணர்த்துவதாக 19ஆம் நூற்றாண்டில் அமைக்கப் பட்டுள்ளன.

## சோழவந்தான்

இன்று சோழவந்தான் என்று பெயர் பெறும் இவ்வூர் முற்பாண்டியர் காலத்தில் சோழாந்தகச் சதுர்வேதி மங்கலம் என்று வழங்கப்பட்டது. சோழாந்தகன் என்னும் பெயர் முற்பாண்டியர் காலத்திய சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் (946-966 கி.பி) சிறப்புப் பெயராகும். பாகனூர்க் கூற்றத்தில் உள்ள தென்கரை, சோழவந்தான்

ஆகிய சில ஊர்களை இணைத்துச் சோழாந்தகச் சதுர்வேதி மங்கலம் உருவாக்கப்பட்டது. சோழாந்தகன் நாழி, சோழாந்தக நந்தவனம் என இம்மன்னன் பெயர் பலவற்றுக்கும் இடப்பட்டது. சோழாந்தப் பல்லவரையர், சோழாந்தக பிரம்மராயர் என அதிகாரிகள் சிலரும் பெயர் வைத்துக் கொண்டனர். சோழவந்தானுக்கு இராசராசன் காலத்தில் சனநாதச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயர் ஏற்பட்டது. இங்கிருந்த பெருமாள் கோவில் இராசராசனின் சிறப்புப் பெயரால் 'சன நாதவிண்ணகர ஆழ்வார் கோயில்' எனப் பெயர் பெற்றது. இன்று இக்கோயில் ஜனக நாராயணப் பெருமாள் கோயில் என்று அழைக்கப்படுகிறது. இராசராசன் காலத்துக் கல்வெட்டுகள் இன்றும் இக்கோவில் சுவர்களில் இடம்பெற்றுள்ளன. கி.பி. 1757இல் ஐதர்அலி திண்டுக்கல்லைக் கைப்பற்றி சோழவந்தானில் தங்கி மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டான். ஆனால் யூசுப்கானின் கடுமையான எதிர்ப்பால் கோட்டைக்குள் நுழைய முடியவில்லை. மாறாக சோழவந்தான் பகுதிகளில் கொள்ளையிட்டுப் பெரும் பொருளுடன் நாடு திரும்பினான். இன்று சோழவந்தான் நகரம் வெற்றிலைக்குப் பெயர் பெற்று விளங்குகிறது.

### தென்கரை

சோழவந்தான் அருகில் வைகையின் எதிர்க் கரையில் அமைந்துள்ளது. வரலாற்றுப் பெருமை வாய்ந்த தென்கரை கிராமம். இவ்வூர்ப் பகுதியில் கடைக்கற்காலத்திலேயே மனிதன் வாழ்ந்ததைக் குறிக்கும் வகையில் கற்கருவிகள் கிடைத்துள்ளன. பெருங்கற்காலத்தைச் சேர்ந்த முதுமக்கள் தாழிகள் தென்கரையின் பகுதிகளிலும் காணப்படுகின்றன. இன்று தென்கரை எனப் பெயர் பெறும் இவ்வூர் சங்க காலத்தில் கள்ளூர் என அழைக்கப்பட்டுள்ளது. (அகம் 256) கட்டி என்ற சிற்றரசர் மரபு இப்பகுதியில் ஆண்டதால் கட்டிகள்ளூர் என்றும் பின்னர் வழங்கலாயிற்று.

முற்பாண்டிய அரசன் செழியன் சேந்தன் இவ்வூரில் தன் பெயரில் சேந்தன் ஏரி என்று ஒரு நீர்நிலையை அமைத்தான். அதுமுதல் சேந்தனேரி கட்டிகள்ளூர் எனப்பட்டது. கி.பி. 1087 முதல் 1104 வரை இப்பகுதியை ஆண்ட இடைக்காலப் பாண்டியன் பராக்கிரமன் பெயரால் இவ்வூர் பராக்கிரம பாண்டியபுரம் என்ற பெயரையும் பெற்றது. கி.பி. 1190இல் இப்பகுதியில் ஆட்சியை ஏற்ற சடாவர்மன் முதலாம் குலசேகரன் காலத்தின் தென்கரை புதிய உயிர்ப்போடு இயங்கியது. இவன் பெயரால் குலசேகரபுரம் என்ற பெயரையும் பெற்றது. ஆனால் மீண்டும் மீண்டும் கட்டிகள்ளூர் என்னும் பழம் பெயரும் அவ்வப்போது வழக்கத்தில் இருந்தது. திருமலை நாயக்கர் காலத்திலேயே இவ்வூர் தென்கரை என்ற பெயரைப் பெற்றதாக அவர் காலக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன.

இங்கு அமைந்துள்ள மூலநாத சுவாமி கோயில் வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகத் திகழ்கிறது. இது முதலில் சோழன் தலை கொண்ட வீரபாண்டியன் காலத்தில் (கி.பி. 946-66) கட்டப்பட்ட சிவன் கோயிலாகும். கால வெள்ளத்தில் அது சிதைந்துவிடவே அதே அடித்தளத்தில் பராக்கிரம பாண்டியனால் (1087 - 1104) கட்டப்பட்டுள்ளது. வீரபாண்டியனால் கட்டப்பட்ட வீரசேகர விண்ணகரம் என்னும் பெருமாள் கோயிலும் சிதைந்து போனது. அக்கோயிலின் கல்தூண்களும் மூலநாத சுவாமி கோயிலில் வைத்துக் கட்டப்பட்டுள்ளன. பிற்பாண்டியன் காலத்திலும் நாயக்கர் காலத்திலும் தொடர்ந்து இக்கோயில் சிறப்பாகப் பராமரிக்கப்பட்டது. இப்பகுதி மக்களின் வளமான வாழ்வுக்காகப் பராக்கிரம பாண்டியப் பேராறு என்ற கால்வாயும் வெட்டப்பட்டு வளம் காணப்பட்டது.

பாண்டிய நாட்டுக் கோவில்களில் தொடக்கக் காலத்தில் தேவ கோட்டங்களில் தெய்வ உருவங்கள் வைக்கும் மரபு பின்பற்றப்படவில்லை. வெற்றுக் கோட்டங் களாகவே அமைக்கப்பட்டிருக்கும். ஆனால் கி.பி. 10-11 ஆம்

நூற்றாண்டுகளில் இம்மரபு சற்றே மாறுதலுக்குட்பட்டது. மூலநாத சுவாமி கோயிலில் தேவகோட்டங்களில் தெய்வ உருவங்கள் வைக்கப்பட்டுள்ளன. முற்சோழர்களின் ஆட்சியின் காரணமாக இம்மரபு ஒரு சில இடங்களில் பின்பற்றப்பட்டுள்ளது. இதற்கு மூலநாத சுவாமி கோயில் சிறந்த எடுத்துக்காட்டாகும்.

## வடுகப்பட்டி

மதுரை திண்டுக்கல் சாலையில் வாடிப்பட்டிக்கு அருகில் அமைந்துள்ள சிற்றூர் வடுகப்பட்டி. இவ்வூரின் முந்தைய பெயர் மானசித்த நல்லூர் என்பது இங்குள்ள கல்வெட்டின் மூலம் தெரிய வருகிறது. இவ்வூர் குறிப்பிடத்தக்க வணிகத் தளமாக கி.பி. 10ஆம் நூற்றாண்டளவில் திகழ்ந்தது. இவ்வணிகர்கள் சமண சமயத்திற்கு ஆதரவு நல்கி அறங்களைக் காத்துள்ளனர். இவ்வூரில் கிடைத்துள்ள சமணத் துறவி ஒருவரின் சிற்பம் தற்போது திருமலை நாயக்கர் அரண்மனை அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளது. அச்சிற்பத்தில் மாலைக் குளம் இறங்கல் நீங்கிய வர்த்தமான தேவர் என்ற கல்வெட்டும் வட்டெழுத்தில் உள்ளது..

இங்குக் கிடைத்த மற்றொரு கல்வெட்டு இவ்வூரை மானசித்த நல்லூரான மாலைக்குளம் என்று குறிப்பிடுவதுடன் இது பாகனூர்க் கூற்றத்தினுள் அடங்கி இருந்தது என்றும் தெரிவிக்கிறது. திசையாயிரத்து ஐநூற்றுவர் என்னும் வணிகக் குழுவினர் இங்கு அறச்சாலையும் குளமும் ஏற்படுத்தி அதனை அத்தாணிகள் என்னும் ஒரு வகை வீரர்களைக் கொண்டு குறைவு வராமல் காத்தனர். கொங்கு நாட்டிலிருந்து மதுரைவரும் பெருவழியில் இவ்வூர் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## பெரிய ஊர்சேரி

வாடிப்பட்டி வட்டம் அலங்காநல்லூருக்கு அருகில் உள்ளது பெரிய ஊர்சேரி என்னும் சிற்றூர். இங்கு ஊரின் மையத்தில் காமாட்சி அம்மன் கோயில் அருகில் கருடத்தூண் ஒன்று நடப்பட்டு அதில் ஒரு கல்வெட்டு ஒன்றும் வெட்டப்பட்டுள்ளது. அதனை நாட்டியவர் எரசக்க நாயக்கனூர் (சின்னமனூர் அருகில்) லட்சுமிபுரம் பழனியாண்டியா பிள்ளை மகன் மவுனகுரு சீடன் சுப்பிரமணிய தேசிகர். இதற்குப் பொருளுதவி செய்தவர் ஊர்சேரி முத்துக்காமாட்சி பிள்ளை. இக்கருடத் தூணை விஷம் தீண்டியவர்கள் மூன்று சுற்றுச் சுற்றி வந்து முட்டினால் விசமிறங்கும். விசந்தீண்டியவர் நேரில் வர இயலாவிடில் அதைப் பார்த்தவர் வந்து கம்பத்தில் முட்டிவிட்டு அருகில் உள்ள கிணற்றில் வேட்டியை நனைத்துப் பிழிந்து போட்டுக்கிட்டுப் போக வேட்டி காயக் காய விசமிறங்கும் என்று கல்வெட்டில் கூறப்படுகிறது. இக்கல்வெட்டின் இன்னொரு படிவம் தேனி மாவட்டம் உத்தமபாளையம் வட்டம் இராசபாளையம் கிராமத்தில் அண்மையில் தொல்லியல் துறையினால் கண்டறியப் பட்டுள்ளது.

# 18. உசிலம்பட்டி வட்டம்

**விக்கிர மங்கலம்**

இவ்வூரில் பெருங்கற்காலத்தைச் சேர்ந்த முதுமக்கள் தாழிகள் கண்டறியப்பட்டுள்ளன. கி.மு. 2 ஆம் நூற்றாண்டளவில் இப்பகுதியிலுள்ள மலைக் குகைகளில் சமணத் துறவியர் வாழ்ந்ததை உறுதிப்படுத்தும் வகையில் கற்படுக்கைகளும் பிராமி கல்வெட்டுகளும் காணப்படுகின்றன. இங்குள்ள மலையில் உண்டாங்கல்லு என்னும் ஓரிடத்தில் ஆறு தமிழ் - பிராமி கல்வெட்டுகள் வெட்டப்பட்டுள்ளன. அவற்றில்

1. **எஇய்ல் அரிஇய்தன் சேவித் ஒன்**
2. **எம் ஊர் சிழிவன் அதன்**
3. **அந்தைய் பிகன் மகன் வெந் அதன்**
4. **பேதலை குவிரன்**
5. **செங்குவிரன்**
6. **குவிராதன்**

என்ற வாசகங்கள் இடம் பெறுகின்றன. சமணர்களுக்கான கற்படுக்கைகளைச் செய்து கொடுத்தவர்களின் பெயர்களாக இதனைக் கருதுவர். இவற்றின் காலம் கி.மு. இரண்டாம் நூற்றாண்டாகும்.

இன்றைய விக்கிரமங்கலம், கி.பி. 11 ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த விக்கிரம சோழபாண்டியன் பெயரால் 'விக்கிரம சோழபுரம்' எனப் பெயர் பெற்றது. இங்குச் சிற்பச்

செழுமை மிக்கச் சிவன் கோயில் ஒன்று அமைந்துள்ளது. இங்குள்ள பிற்பாண்டியர் காலக் கல்வெட்டுகளில் கோயிலின் பெயர் மதுரோதய ஈசுவர முடையார் கோயில் எனக் குறிப்பிடப்படுகிறது. இக்கல்வெட்டுகள் கோயிலுக்கு வழங்கப்பட்ட நிலத் தானங்களைக் கூறுகின்றன.

இடைக்காலத்தில் இவ்வூர் முக்கியமான வணிகத் தளமாகச் செயல்பட்டு இருக்கிறது. ஐயப்பொழில் நானாதேசி எனும் வணிகக் குழுவினர் இங்கு வணிகத்தில் ஈடுபட்டுள்ளனர். அவர்களால் இவ்வூரின் பெயரும் 'தேசிபட்டணமான ஐயப்பொழில் விக்கிரம சோழபுரம்' என மாற்றப்பட்டுள்ளது. இவர்கள் 'நகரம்' என்ற நிர்வாக அமைப்பையும் கொண்டு செயல்பட்டுள்ளனர்.

## முதலமைக்குளம்

விக்கிரமங்கலம் உண்டாங்கல்லு குன்றின் அருகில் உள்ளது. இங்கு இராக்கிபுடவு என்ற குகை அமைப்பின் முகப்பில் தமிழ் - பிராமி கல்வெட்டுள்ளது.

**வேம்பிற் ஊர் பேர் அயஅம் சேதவர்**

என்பது கல்வெட்டு வாசகம். வேம்பிற்றூர் அவையினர் பெரிய குளத்தை (அயம்) செய்தனர் என்பது இதன் பொருள். 2000 ஆண்டுகளுக்கு முன் ஊரவை இருந்தது சிறப்பாகும்.

## குருவித்துறை

சோழவந்தானுக்கு எதிர்க் கரையில் தென்கரை கிராமத்திற்கு மேற்கே பத்து கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. அயன் குருவித்துறை என்றும் கோவில் குருவித்துறை என்றும் இரண்டு பகுதிகளாக உள்ளது. இதன் பழம் பெயர் குருவிக் கல்லுடைப்பு என்பதாகும். அணைக் கட்டுவதற்காக இப்பகுதி குன்றுகளில் கல் உடைக்கப்பட்டதால் இப்பெயர் ஏற்பட்டுள்ளது. கி.பி.

11ஆம் நூற்றாண்டில் இப்பகுதி குலசேகர மங்கலம் என்றும் சக்கரதீர்த்தம் என்றும் இர்ண்டு பகுதிகளாகப் பிரிந்திருந்தது. இவ்விரு பகுதிக்கும் சேர்த்து ஸ்ரீ வல்லபன் (கி.பி. 1101-1124) பெயரால் ஸ்ரீ வல்லவபுரம் என்னும் பெயர் வழங்கியுள்ளது. இங்கு அமைந்துள்ள புகழ் பெற்ற பெருமாள் கோயில் சித்திர ரதவல்லபப் பெருமாள் கோயில் என்றழைக்கப்படுகிறது. ஆனால் கல்வெட்டுகளில் இக்கோயிலின் பெயர் திருச்சக்கர தீர்த்தத்து நின்றருளிய பரமசுவாமிகள், எம்பெருமாள் என்றும் பெயர் குறிப்பிடப்படுகின்றன. பாகனூர்க் கூற்றத்துப் பிரமதேயம் சோழாந்தகச் சதுர்வேதிமங்கலத்து திருச்சக்கரத்தாழ்வார் என்றும் கூறப்படுகிறது. இக்கோயில் கி.பி. 12 ஆம் நூற்றாண்டில் ஆட்சி செய்த ஸ்ரீ வல்லபன் காலத்தில் கட்டப்பட்டது என்பதை இங்குள்ள கல்வெட்டுகள் கொண்டு அறியலாம். இங்கு இடைக்கால (கி.பி. 12 ஆம் நூ.ஆ.) பாண்டியர் கல்வெட்டுகள் மொத்தம் 14 உள்ளன. இவை இக்கோயி லுக்குக் கொடுக்கப்பட்ட நிலம், பொன் ஆகிய கொடைகள் பற்றிக் கூறுகின்றன. 'உய்யக் கொண்டாள்வார்' என்ற பெயரில் ஒரு செப்புத் திருமேனியை நெற்குப்பை நாட்டு கேரளாந்தகபுரத்து வியாபாரி அப்பன் ஈசுரவனின் மனைவி திருவரங்கன் பெற்றதிரு என்பவள் செய்தளித்துள்ளாள். ஆனால் இச்செப்புத் திருமேனி தற்போது இக்கோயிலில் இல்லை.

### திடியன்

இன்றைய உசிலம்பட்டி வட்டத்தில் உள்ள இச்சிற்றூர் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே வரலாற்று ஆவணங்களில் இடம் பெற்றுள்ளது. மேட்டுப் பட்டியில் கிடைக்கும் கி.மு. இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த பிராமிக் கல்வெட்டுகளில் திடியில் ஆதன் என்று ஒருவன் குறிக்கப்படும் கல்வெட்டு உள்ளது. இதன் மூலம் திடியில் என்பதே பழம் பெயர் என்றும், நாளடைவில் திடியன் என அது மருவி உள்ளது என்றும் அறியலாம்.

இவ்வூரில் நுண்கற்கருவிகள் சேகரிக்கப்பட்டுள்ளமையால் இவ்வூரின் தொன்மை பெறப்படும். திருவில்லிபுத்தூர் கோயிலுக்காக வாணாதிராயர் காலத்தில் திடியனில் நிலக் கொடைகள் கொடுக்கப்பட்டுள்ளன என்பதை வில்லி புத்தூர்க் கல்வெட்டு ஒன்று தெரிவிக்கிறது.

# 19. திருமங்கலம் வட்டம்

## திருமங்கலம்

திருமங்கலம் மதுரை விருதுநகர் சாலையில் அமைந்துள்ள சிறு நகரம். இவ்வூரைச் சுற்றியும் சீவரக்கோட்டை, கல்லுப்பட்டி ஆகிய ஊர்களில் புதிய கற்காலக் கருவிகள் கிடைத்துள்ளன. இவ்வூரில் ஏற்கனவே ரோமானிய நாணயம் ஒன்று கண்டறியப்பட்டுள்ளது. அண்மையில் இவ்வூரில் ஒரே இடத்தில் சுமர் 5 அடி உயரமுள்ள 4 முதுமக்கள் தாழிகள் கண்டறியப்பட்டன. மங்கலம் என்ற பின்னொட்டுச் சொல் இது பிராமணர்க்கு வழங்கப்பட்ட ஊர் என்பதைச் சுட்டுகிறது. பண்டைக் காலத்திலேயே இது ஒரு வணிகப் பெருவழியில் அமைந்திருந்த முக்கிய ஊராக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

## மேல உறப்பனூர்

திருமங்கலம் வட்டத்தில் அமைந்துள்ளது இவ்வூர். இவ்வூரில் பெரிய நீர்ப்பாசனக் கண்மாய் அமைக்கப்பட்டு கி.பி. 10 ஆம் நூற்றாண்டு அளவில் மடைகள் கட்டியுள்ளனர். முற்பாண்டியர் காலத்தில் அமைக்கப்பட்ட இம்மடையில் இரண்டு கல்வெட்டுகள் காணப்படுகின்றன. ஒன்றில் ஸ்ரீ வீர நாராயணன் என்றும் மற்றொன்றில் ஸ்ரீ கரிவரமல்லந் என்றும் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன. இவை இம்மடையை அமைத்த பராந்தக வீர நாராயணனைக் குறிக்கும் பெயர்களாக இருக்கலாம்.

# 20 பேரையூர் வட்டம்

## டி. கல்லுப்பட்டி

திருமங்கலம் வட்டத்தில் அமைந்துள்ள ஊர் இது. பெருங்கற்காலப் பண்பாட்டு எச்சங்கள் மிகுந்துள்ள ஊர். இதன் வரலாற்றை அறிய 1976-77 ஆம் ஆண்டில் தொல்லியல் பரப்பாய்வுத் துறை (ASI) யின் சார்பில் அகழாய்வு மேற்கொள்ளப்பட்டது. இவ்வூருக்கு அருகில் உள்ள தேவன் குறிச்சி என்னும் மலைச் சரிவில் மிகுதியான முதுமக்கள் தாழிகளும், கருப்பு சிவப்பு பானை வகைகளும் வெளிப்பட்டன. இங்குச் செம்புக் காலத்தைச் சேர்ந்த மக்களும் வாழ்ந்துள்ளனர். இங்கு நடைபெற்ற அகழாய்வில் வண்ணம் தீட்டப்பட்ட கருப்பு - சிவப்பு, சாம்பல் வண்ணப் பானை ஓடுகளும், பலவிதமான மணி வகைகளும், செப்புக் காசுகளும் சேகரிக்கப்பட்டுள்ளன. மதுரைப் பகுதியின் தொன்மை வரலாற்றை அறிவதற்கு இங்கு மேற்கொள்ளப் பட்ட அகழாய்வுகள் நல்ல சான்றுகளைத் தந்துள்ளன.

## ஏழுமலை

மதுரைக்கு மேற்கே 40 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது ஏழுமலை கிராமம். இதற்கு அருகில் டி. இராமநாதபுரம் செல்லும் வழியில் மாதாநத்தம் என்னும்

இடத்தில் சுப்பிரமணிய கோயில் ஒன்று உள்ளது. இது இப்பகுதியில் இருந்த ஜமீன்தார்களான கம்பளத்து நாயக்கர்களால் நிருவகிக்கப்பட்டு வந்தது. கோயில் வழிபாட்டிற்கும் நிருவாகத்திற்குமாக இந்த ஜமீன்தார்கள் வீரேசன்குளம் என்னும் குளத்தை மாநியமாக விட்டுச் செப்புப் பட்டயம் ஒன்று கொடுத்துள்ளனர். இதன் காலம் கி.பி. 1715 ஆகும். இச்செப்பேட்டில் எழுமலைக்கு அழகிய நல்லூர் என்ற பெயரும் இருப்பது குறிப்பிடப்படுகிறது.

## பேரையூர்

மதுரை மாவட்டத்தில் ஒரு வட்டத்தின் தலைநகரமாகப் பேரையூர் உள்ளது. இது நாயக்கர் மற்றும் ஜமீன்தார்களால் ஆளப்பட்ட ஊர். இவ்வூரைச் சுற்றிலும் பெருங் கற்காலத் தாழிகள் கிடைப்பது இவ்வூரின் தொன்மையை உறுதிப்படுத்தும். இவ்வூரின் அருகில் மொட்டை மலை என்று அழைக்கப்படும் மலை ஒன்று உள்ளது. இதன் உச்சியில் சிவன் கோயில் ஒன்றும் அதற்கு அருகில் திறந்த வெளிப் பாறையில் ஒருபெரிய கல்வெட்டு ஒன்றும் உள்ளன. இக்கோயில் மல்லிகார்ச்சுனர் என அழைக்கப்படுகிறது. இங்குள்ள கல்வெட்டு முதலாம் சடையவர்மன் வீரபாண்டியனின் (கி.பி. 1280) 27ஆம் ஆட்சியாண்டைச் சேர்ந்ததாகும். இக்கல்வெட்டின் மூலம் இவ்வூரின் பழம் பெயர் கடுங்கோ மங்கலம் என அறியலாம். முற்பாண்டிய அரசை நிறுவிய முதல் மன்னன் கடுங்கோன். அவன் பெயரால் இவ்வூர் வழங்கியுள்ளமை சிறப்புக் குறியதாகும். இவ்வூர் நிலங்களையும் குளத்தையும்

விலைக்குப் பெற்று முத்துடையார் விக்கிரமசிங்கத் தேவன் என்பவர் கோயிலுக்குத் தேவதானமாகக் கொடுத்ததை இக்கல்வெட்டு கூறுகிறது. கடுங்கோமங்கலம் என்பது செங்குடி நாட்டுப் பிரிவுக்குள் அடங்கியிருந்தது.

# 21. மதுரை மாவட்டத்தில் சமயங்கள்

## 1. சமண சமயம்

மதுரை நகரைச் சுற்றியுள்ள பல மலைகளிலும் இரண்டாயிரம் ஆண்டுகட்கும் முன்பிருந்தே சமண முனிவர்கள் வாழ்ந்துள்ளனர். அவர்கள் அங்கு வசித்தமைக்கான கற்படுக்கைகளும் தமிழ்பிராமிக் கல்வெட்டுகளும் அங்குள்ளன. மதுரையைச் சுற்றியுள்ள எண்பெருங்குன்றங்களில் சமணர்கள் தங்கியிருந்தனர் என்பதை ஒரு பழம்பாடல் கூறுகிறது.

பரங்குன்று உருவகம் பப்பாரம் பள்ளி
யருங்குன்றம் பேராந்தையானை – இருங்குன்றம்
என்றெட்டு வெற்பும் எடுத்தியம்ப வல்லார்க்குச்
சென்றெட்டு மோபிறவித் தீங்கு

இவை தவிர மதுரையைச் சுற்றிலும் உள்ள மாங்குளம், கீழவளவு, அரிட்டாபட்டி, திருவாதவூர், கொங்கற்புளியங் குளம், குன்னத்தூர், கருங்காலக்குடி, முத்துப்பட்டி ஆகிய இடங்களிலும் திருப்பரங்குன்றம், யானைமலை, அழகர்மலை ஆகிய முன் சொன்ன ஊர்களிலும் சமணர் வாழ்ந்த இடங்களும் தமிழ்பிராமிக் கல்வெட்டுகளும் உள்ளன. இக்கல்வெட்டுக்கள் யாவும் கி.மு. 3ம் நூற்றாண்டு முதல் கி.பி. 2ஆம் நூற்றாண்டு வரையிலான காலத்தைச் சேர்ந்தவை.

சங்க நூலான மதுரைக் காஞ்சியில் சமணர் பள்ளி ஒன்று மதுரையில் இருந்தமைக்கான குறிப்பு உள்ளது. குன்றைக் குடைந்து சமணப்பள்ளி சமைத்திருந்தவர் என

அதன் மூலம் அறிகிறோம். கி.பி. 470இன் ஸ்ரீபூஸ்யபாதரின் மாணாக்கர் வஜ்ரதந்தி என்னும் சமணத்துறவியால் முதல் சமண சங்கம் மதுரையில் தோற்றுவிக்கப்பட்டது. இக்காலம் முதல் சமணம் மதுரைப்பகுதியில் பெரும் செல்வாக்குப் பெற்றது எனலாம்.

பாண்டிய மன்னன் நின்ற சீர் நெடுமாறன் சமணத்தைத் தழுவியிருந்ததாகவும் சம்பந்தரின் முயற்சியால் அவன் சைவ சமயத்திற்கு மீண்டுவந்தான் என்றும் பெரியபுராணம், திருவிளையாடல் புராணம் மூலம் அறிகிறோம். சம்பந்தர் தன் தேவாரப் பதிகத்தில்.

**ஆனைமாமலை ஆதியாயவிடங்களில் பல**
**அல்லல் சேர் ஈனர்களுக்கு எளியேன் அல்லேன்**

என்று பாடுகிறார். சம்பந்தர் காலத்தில் சைவ சமயத்திற்கும் சமண சமயத்திற்கும் பெரும் மோதல் ஏற்பட்டது என்றும் மதுரையில் அனல்வாதம், புனல்வாதம் நிகழ்த்தி சம்பந்தர் சமணரை வென்றார் என்றும் தோல்வியுற்ற சமணர்கள் நூற்றுக்கணக்கில் கழுவிலேற்றப்பட்டனர் என்றும் பெரிய புராணம், திருவிளையாடற்புராணம், தக்கயாகப்பரணி ஆகிய நூல்கள் மூலம் அறிகிறோம்.

ஆனால் சமணப்பூசல்கள் ஓரளவு இருந்திருந்த போதிலும் சம்பந்தர் காலத்திற்குப் பிறகு மதுரைப்பகுதியில் சமணம் முற்றாக அழிந்துவிடவில்லை. தொடர்ந்து மக்கள் ஆதரவைப் பெற்று வந்துள்ளது. இதற்குச் சான்றாகப் பல சமண சமயச் சின்னங்கள் மதுரையைச் சுற்றிலும் நிறைந்துள்ளன. எடுத்துக்காட்டாக ஆனைமலை, சமணர்மலை (கீழக்குயில்குடி), கீழவள்வு, கருங்காலக்குடி, அழகர்மலை, கழிஞ்சமலை அரிட்டாபட்டி, திருப்பரங்குன்றம்,கொங்கற் புளியங்குளம் உத்தமபாளையம், குப்பல் நத்தம் ஆகிய ஊர்களைக் கூறலாம். இவ்வூர்களில் பல சமண தீர்த்தங்கரர்களின் திருஉருவங்களும் இயக்கர், இயக்கியர் உருவங்களும் செதுக்கப்பட்டுக் கல்வெட்டுகளும் பொறிக்கப்பட்டுள்ளன.

மதுரைப் பகுதி மற்றும் பாண்டி நாடு முழுவதும் சமண சமயம் கி.பி. 10-11 ஆம் நூற்றாண்டு. வரை செல்வாக்குடன் இருந்து பின்னர் செல்வாக்கிழந்தது.

## 2. கிறித்தவச் சமயம்

மதுரை நாயக்கர் மரபில் வந்த வீரப்ப நாயக்கர் ஆட்சிக்காலத்தில் (கி.பி. 1572 - 1595) முதல் முதலாகக் கிறித்தவச் சமயப் பிரச்சாரம் தொடங்கியது. கி.பி. 1592இல் ஏசு கழகத் தொண்டர்கள் (Jesuit Society) முதல் முதலாகத் தங்கள் பணிக் கழகத்தை (Madurai Mission) மதுரையில் தொடங்கினர். பெர்னாண்டஸ் என்ற போர்த்துக்கீசிய துறவியின் தலைமையில் இயங்கிய இக்குழுவினர் நாயக்க மன்னரின் அனுமதியுடன் மதுரையில் மாதா கோயில் ஒன்று கட்டினர். பெர்னாண்டஸ் பாதிரியார் 14 ஆண்டுகள் கடுமையான சமயப்பணி செய்தும் உயர்குடி இந்துக்களை மதம்மாற்ற அவர் எடுத்துக் கொண்ட முயற்சி வெற்றி பெறவில்லை. அவரை மாட்டிறைச்சி உண்ணும் பரங்கியர் எனக் கருதி மக்கள் சமய மாற்றத்திற்கு ஆதரவு காட்டவில்லை.

ஆனால் முத்து கிரு ணப்ப நாயக்கர் காலத்தில் (கி.பி. 1601 - 1609) ராபர்டி- டி- நோபாலி என்ற இத்தாலியப் பாதிரியார் மதுரைக்கு வந்து கிறித்தவ சமயத் தொண்டில் ஈடுபட்டார். இவர் ரோமன் கத்தோலிக்கப் பிரிவைச் சேர்ந்தவர். இவர் மதுரை மக்களின் நாடித்துடிப்பை நன்கு உணர்ந்து மக்களோடு மக்களாகக் கலந்தார். தன்னை ரோமாபுரிப் பார்ப்பனர் எனக் கூறிக்கொண்டு காவி உடை அணிந்து பூணூல் தரித்து சைவ உணவை உட்கொண்டு இந்து சமயச் சடங்குகளை ஏற்றுக்கொண்டு வாழ்ந்தார். நெற்றியில் பொட்டு வைத்துக் கொள்ளுதல், சந்தியா வந்தனம் செய்தல், எனக் கிறித்தவ சமயத்தை இந்திய மயமாக்கி, தமிழிலும் தெலுங்கிலும் வடமொழியிலும் சரளமாகப் பேசி மக்களை ஈர்த்தார். இவரது முயற்சி ஓரளவுக்குப் பலனளித்தது. உயர்குடி இந்துக்கள் சிலர் கிறித்தவ மதத்தைத் தழுவினர். இது முதல் கிறித்தவம் வளரத் தொடங்கியது.

ஆனால் இதன் காரணமாக ராபர்ட்-டி-நோபிலிக்கும் பெர்னாண்டஸ் பாதிரியார்க்கும் இடையில் பகை மூண்டது. இந்து மதச் சடங்குகளை ஆதரிக்கிறார் என நோபிலி மீது மேல்மட்டத்தில் புகார் தெரிவிக்கப்பட்டது. பத்து ஆண்டுகள் விசாரணைக்குப் பின் நோபிலி குற்றம் அற்றவர் என விடுவிக்கப்பட்டார். எனினும் கிறித்தவ சமயத்தின் வளர்ச்சி உட்பூசல் காரணமாகச் சற்றுத் தளர்வுற்றது. நோபிலி பாதிரியார் சேலம், திருச்சிப் பகுதிகளில் பணி செய்ய அனுப்பப்பட்டார். அவருக்குப்பின் மதுரையில் வைக்கோ பாதிரியார் என்பவரால் கிறித்தவப்பணி தொடரப்பட்டது. திருமலை நாயக்கர் மிகுந்த சமயப் பொறையோடு இவர்களுக்கு உதவி அவர் தம் பணிகளைச் செய்ய ஆதரவளித்தார்.

இரண்டாம் முத்து வீரப்பன் காலத்தில் (கி.பி. 1682-1689) ஜான்-டி-பிரிட்டோ எனும் பாதிரியார் தலைமையில் கிறித்தவப் பணிகள் தீவிரமாக நடைபெற்றன. அரசரும் ஆதரவு காட்டினார். இக்காலத்தில் வாடிப்பட்டிப் பகுதியில் கிறித்தவத்தின்பால் மிகுந்த ஆர்வம் காட்டினர். மக்கள் மறவர் நாட்டில் எழுந்த கிளர்ச்சியால் பிரிட்டோ துன்புற்றார்.

மதுரைப்பகுதியின் கிறித்துவ சமயப் பணிகளுக்கு அனைத்து நாயக்க மன்னர்களும் ஆதரவளித்தனர். தஞ்சை நாயக்கர் கிறித்தவர்களை மதுரைப் பகுதியிலிருந்து வெளியேற்றும்படிக் கேட்டுக் கொண்ட போதும் ராணி மங்கம்மாள் அதற்கு உடன்படவில்லை. பாதிரிமார்களின் கடிதங்கள் மதுரை நாயக்க மன்னர்களின் பெருந்தன்மையை வெளிப்படுத்துகின்றன.

மதுரையில் இருந்த ஆங்கிலேய மாவட்ட ஆட்சித் தலைவர் ரோஸ் பீட்டர் (பீட்டர் பாண்டியன்) 6.8.1828இல் காலமான போது அவர் மதுரை நகரில் இருந்த புராட்டஸ்டண்டு தேவாலயத்துக்கு வெளியே புதைக்கப் பட்டார். மதுரையில் இருந்த கட்டடக்கலை வல்லுநர்

ராபர்ட் பிஷர் அவர்களின் தந்தையார் ஜார்ஜ் பிரடரிக் பிஷர் 1867இல் இறந்த போது அவரது உடல் பீட்டர் பாண்டியனின் கல்லறைக்கு அருகிலேயே புதைக்கப்பட்டது. இவ்விரண்டு கல்லறைகளையும் உள்ளடக்கி 1881இல் புனித ஜார்ஜ் கிறித்தவ தேவலாயம் கட்டப்பட்டது.

மதுரை கீழவாசல் பகுதியில் உள்ள தேவலாயம் 1843இல் கட்டத் தொடங்கி 1845இல் முடிக்கப்பட்டது. திருமலை மன்னர் அரண்மனைக்கு அருகில் உள்ள தூய மரியன்னை தேவலாயம் கிபி. 1842இல் அருட் தந்தை கார்னியர் அவர்களால் கட்டப்பட்டது.

அமெரிக்கன் மதுரை கிறித்தவ பணிக்கழகம் (The American Madurai Mission) கி.பி. 1834 இல் துவங்கப்பட்டுள்ளது. இக்கழகம் இலங்கையிலுள்ள ஜாஃப்னா பணிக்கழகத்தின் கிளையாகத் துவங்கப்பட்டது. இப்பணிக்கழகத்தின் சமயப் பணியாளர்களாக திரு. ஹோசிங்டன், திரு & திருமதி டோட், ஆகியோர் பணிபுரிந்துள்ளனர். இப்பணிக் கழகத்தின் கிளைகள் 1838 இல் திருமங்கலத்திலும் 1845இல் பசுமலையிலும் 1848இல் பெரிய குளத்திலும் 1857இல் மேலூரிலும் துவங்கப்பட்டன. இப்பிரிவினரால் 1898இல் மகளிருக்காகவும் குழந்தைகளுக்காகவும் மிஷன் மருத்துவமனை துவங்கப்பட்டுள்ளது.

## 3. இஸ்லாமியர்

கி.பி. 14ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் மாலிக்காபூர் படையெடுப்பினைத் தொடர்ந்து மதுரை சுமார் 50 ஆண்டுகாலம் சுல்தானியர் ஆட்சியில் இருந்தது. இதே காலத்தில் பாண்டிய மன்னன் ஒருவன் தனது கோடைகால அரண்மனையை இஸ்லாமியத் துறவிக்கு வழங்கியதாகவும் அதிலேயே இன்றைய காஜிமார் பள்ளிவாசல் கட்டப்பட்டதாகவும் கூறப்படுகிறது.இதுவே மதுரையில் அமைந்த முதல் பள்ளிவாசல் ஆகும். வைகையின் வடகரையில் கோரிப்பாளையத்தில் அமைந்துள்ள பள்ளி

*வாசலில் நடப்பட்டுள்ள ஒரு தூணில் வீரப்ப நாயக்கனின் கொடை பற்றிக் கூறப்படுகிறது. கி.பி. 1811இல் தாசில்தார் பள்ளிவாசல் கட்டப்பட்டதாகக் கூறுவர். கான்சாகிப் என்ற முகமது யூசுப்கான் ஆங்கிலேயர்களால் (கி.பி. 1764இல்) கொல்லப்பட்டான். அவனைப் புதைத்த இடம் இன்று சம்மட்டிபுரம் எனப்படுகிறது. இங்கும் ஒரு பள்ளிவாசல் அமைந்துள்ளது.*

## 4. பௌத்தம்

*மதுரைப்பகுதியில் சமணசமயம் பெற்றிருந்த செல்வாக்கை பௌத்தம் பெறவில்லை. எனினும் அழகர் கோயில் பகுதியில் பௌத்த சின்னங்கள் இருந்ததாகக் கூறுவதுண்டு. 'அருகரோடு புத்தரும் அமர்ந்தருளும் சோலை' என அழகர் மலையைப் பற்றிய ஒரு பழம் பாடல் கூறுகிறது.*

*மதுரைக்கு அருகில் உள்ள இன்றைய பாண்டி முனீஸ்வரர் கோயில் ஒரு காலத்தில் புத்தர் கோயிலாக வழிபட்டிருக்க வேண்டும் என்பர்.*

# 22. மதுரைப்பகுதியில் கிடைத்த நாணயங்கள்

மதுரைப் பகுதியில் போடி நாயக்கனூரில் (தற்போது தேனிமாவட்ட ஊர்) முத்திரை குத்தப்பட்ட காசுகள் (Punchmarked coins) கிடைத்துள்ளன. இவை சங்ககாலத்திற்கும் முந்தியவையாகும். மதுரை நகரிலேயே ரோமானியக் காசுகளும் கிடைத்துள்ளன. இதன்மூலம் சங்ககாலப் பாண்டியர்களின் அயல்நாட்டு வணிகத் தொடர்புகள் புலப்படும்.

அண்மைக் காலத்தில் கம்பம் பள்ளத் தாக்கில் உத்தமபுரம் (தேனி மாவட்டம்) என்னும் கிராமத்தில் கிடைத்த புதையலில் வெள்ளியாலான ஒன்பது ரோமானிய நாணயங்கள் கிடைத்துள்ளன. இவை அனைத்தும் அகஸ்டஸ் சீசரின் காலத்தவையாகும். (கி.மு -27 - கி.பி. 14)

மதுரை கோவலன் பொட்டல் என்னும் இடத்தில் மேற்கொள்ளப்பட்ட தமிழ்நாடு அரசு தொல்லியல் துறையின் அகழாய்வின் மூலம் மீன் சின்னம் பொறிக்கப்பட்ட சங்கப்பாண்டியர் காலச் செப்புக்காசு ஒன்று கண்டறியப் பட்டுள்ளது. ஆனால் இதில் எவ்விதமான பெயர் அல்லது எழுத்துக்களும் இல்லை.

சங்ககாலப் பாண்டியர் காசாக பெருவழுதி என்ற எழுத்துப் பொறிப்புடன் கூடிய காசு ஒன்றைக் கண்டறிந்து வெளியிட்டுள்ளார் நாணயவியலாளர் திரு. ஆர். கிருஷ்ணமூர்த்தி. அழகன் குளம் அகழாய்வின் மூலம் சங்ககாலப் பாண்டியர் காசுகளும் கி.பி. 4-5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த ரோமானியக் காசுகளும் வெளிக் கொணரப்பட்டுள்ளன.

சுமார் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பு திருவில்லி புத்தூருக்கு அருகில் நத்தம்பட்டி என்னும் கிராமத்தில் ஒன்பது ரோமானியத் தங்க நாணயங்கள் கிடைத்தன. இவை கி.பி. 4-5 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டாம் தியோடோசியஸ், முதலாம் லியோ, ஜீனோ ஆகிய அரசர்களுடையதாகும். இதன் மூலமும் பாண்டியநாடு ரோமானிய நாட்டுடன் கொண்டிருந்த வணிக உறவு உறுதிப்படும்.

முற்பாண்டியர் காசுகள் என எவையும் இதுவரை கிடைக்கவில்லை. வரகுணன் பெயர் தாங்கிய ஒரு தங்கக்காசு தற்போது தேசிய அருங்காட்சியகத்தில் உள்ளது. ஆனால் அது ஒரு பழம்பொருள் விற்பனை யாளரிடம் பெறப்பட்டுள்ளதால் அக்காசினுடைய உண்மைத் தன்மையை ஆய்வாளர்கள் சந்தேகிக்கின்றனர்.

முதலாம் இராசராச சோழனின் வெள்ளிக்காசு ஒன்று வைகைக்கரையில் தேனூர் என்ற ஊரில் கிடைத்துள்ளது. பிற்பாண்டியர் காலத்தில் கி.பி. 13 ஆம் நூற்றாண்டிளவில் பல காசுகள் வழக்கத்தில் இருந்துள்ளன. அவை சுந்தரபாண்டியன், வீரபாண்டியன், சோணாடு கொண்டான், கச்சிவழங்கும் பெருமாள் கோதண்டராமன், எல்லாந் தலையானான், குலசேகரன் என்னும் பெயர்கள் பொறித்த காசுகள் ஆகும். கலியுகராமன் என்ற பெயரும் சில காசுகளில் இடம்பெற்றுள்ளது. பெரும்பாலான இக்காசுகளில் ஒருபுறம் அரசனது பெயரும் மறுபுறம் இணைகயல்களுக்கிடையில் செண்டு அமைப்பும் உள்ளன.

கி.பி. 13 முதல் 15 ஆம் நூற்றாண்டுவரை மதுரைப் பகுதியில் வாணாதிராயர்கள் குறுநிலத் தலைவர்களாக ஆட்சியில் பங்கு பெற்றிருந்தனர். அவர்களும் தங்களுக்கென காசுகள் வெளியிட்டனர். மதுரை நகரில் வைகை நதியின் கரைகளில் இவர்கள் வெளியிட்ட காசுகள் அவ்வப்போது வெளிப்பட்டு வருகின்றன. இவர்கள் தீவிர வைணவ பக்தர்கள் தங்களது கொடியில் திருமாலின் வாகனமான கருடனைக் கொண்டிருந்தவர்கள். இவர்களுக்குச் சமர

கோலாகலன், புவனேக வீரன், கருடகேதனன் என்று பல பட்டங்கள் உண்டு. இவர்கள் வெளியிட்ட காசுகளில் ஒருபுறம் கருடன் உருவம் மீன் மீது நிற்கும் வகையிலும் மேலே சங்கு சக்கரம் பொறித்தும் காணப்படும். மறுபுறம் சமரகோலகலன் என்ற பெயர் மூன்றுவரிகளில் எழுதப் பட்டிருக்கும். இதுபோல புவனேகவீரன் என்ற பெயரும் சில காசுகளில் காணப்படுகிறது.

மதுரை நாயக்கர் ஆட்சியில் நாயக்க மன்னர்களாலும் காசுகள் வெளியிடப்பட்டுள்ளன. அவர்களது காசுகளில் ஒரு புறம் அவர்களது அரசச் சின்னமான காளை உருவமும் அதன் முன்பாக கட்டாரி ஒன்றும் மேலே பிறைச்சந்திரனும் மறுபுறம் அரசர்களின் பெயரைக் குறிக்கும் முதல் எழுத்தும் இடம்பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக, வி,வீ, தி, சொ ஆகிய எழுத்துக்கள் முறையே விசுவநாத நாயக்கர், வீரப்ப நாயக்கர், திருமலை, சொக்கநாதர் ஆகியோர் பெயர்களை முறையே குறிப்பனவாகும். மங்கம்மாள் பெயர்பொறித்த காசுகளும் வெளியிடப்பட்டுள்ளன. சில காசுகளில் அரசர் பெயரைக் குறிக்கும் தெலுங்கு எழுத்துக்கள் இடம் பெற்றுள்ளன. இன்னும் சில காசுகளில் பின்புறம் 'பழனி' என்ற ஊர்ப் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. நாயக்கர் காலத்தில் பழனி நகரம் முக்கிய நாணயச் சாலையாகச் செயல்பட்டிருக்கலாம். அதனைக் குறிக்கும் வகையில் இச்சொல் இடம்பெற்றுள்ளது எனலாம்.

கி.பி. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் மாபூப்கான், யூசுப்கான் (மருதநாயகம் (எ) கான் சாகிப்) ஆகியோர் சில காலம் மதுரைப் பகுதியின் தலைவர்களாக இருந்தனர். அவர்கள் பெயர் பொறித்த காசுகளும் ஒரு சில கிடைத் துள்ளன. இவை செப்புக்காசுகளாகும். காசின் ஒருபுறம் வட்டத்திற்குள் 6 புள்ளிகளும், பின்புறம் தமிழில் 'கானு' என்ற பெயர்களும் காணப்படுகின்றன.

மதுரையில் நாணயவரலாறு என்பதும் சங்ககாலந் தொடங்கி அண்மைக்காலம் வரை ஆராயத்தக்க வகையில் அமைந்துள்ளது.

